Regd. No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 45 காசு



**தொண்டர்**

எல்லாச் சீர்திருத்த இயக்கங்களின் வெற்றியும் அதற்குரிய தொண்டர்களின் தூய்மையையே பொறுத்திருக்கும்.

-அண்ணல் காந்தி

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**புகழாரம்**

பாதையோர படுக்கைவாசிகளின் நினைவிலேயே நான் எப்போதும் இருக்கிறேன். பதவிகளும், மாலைகளும், புகழாரங்களும் எனக்கு மகிழ்ச்சியளிப்பதில்லை.

-பேரறிஞர் அண்ணா



மலர்: 6 சென்னை 10 - 7 - 82 சனி வெளியூர் 11 - 7 - 82 ஞாயிறு இதழ்: 260

★ தமிழகத்தை கறுப்புப் பட்டியலில் சேர்க்கும் அபாயம் தவிர்ப்பு

★ இலவச உணவுத்திட்டம் நல்லமுறையில் செயல்பட்டு வருகிறது

★ சென்னையில் விபத்துக்களைத் தடுக்க பறக்கும் படை

★ 'இரு கேரளா' ஒப்பாரி வைப்போரே... சிங்கப்பூர் ஜனாதிபதி யார்?

## சாதிக் கலவரத்தைத் தூண்டுபவர்கள் மீது

# பாதுகாப்பு சட்டம் பாயும்

## முதல்வர் புரட்சித்தலைவர் பேட்டி

**சென்னை, ஜூலை 10- சாதி இனபேதம் பேசி கலவரங்களைத் தூண்டுவோர் மீது தேசிய பாதுகாப்புச் சட்டப்படி நடவடிக்கை எடுக்கப்படும் என்று முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.**

அரசு தலைமைச் செயலகத்தில் நடந்த அனைத்துக் கட்சித் தலைவர்கள் கூட்டத்திற்குப் பிறகு நிருபர்களுக்கு முதல்வர் புரட்சித் தலைவர் பேட்டி அளித்தார்.

அப்போது அவர் கூறியதாவது:-

நிருபர்:- விவசாயக் கடன் ஒழுங்காக வசூல் ஆகிறதா? கறுப்புப் பட்டியல் பிரச்னை தவிர்க்கப் பட்டு விட்டதா?

### விவசாயிகளே முன்வந்துபணம் கட்டுகின்றனர்

முதல்வர்:- விவசாயக் கடன் வசூல் ஒழுங்காக நடந்து வருகிறது. விவசாயிகளே முன் வந்து பணம் கட்டுகிறார்கள். கடுமையான நடவடிக்கை எதுவும்இல்லை, தமிழகம் கறுப்பு பட்டியலில் சேர்க்கப்படும் ஆபத்து தவிர்க்கப்படும் நிலையில் உள்ளது.

நிருபர்: விவசாய உயர் மட்டக் குழுவில் உள்ள சிலர் போராட்டம் நடத்தப்போவதாக அறிவித்து இருக்கிறார்களே?

முதல்வர்:- அவர்கள் அப்படி அறிவித்தாலும் குழுவில் வந்து கருத்தைச் சொல்லலாம். ஆனால் அவர்கள் அறிவித்துள்ள அறிவிப்பு வேறு. நடைமுறை வேறு. பரிணாம வளர்ச்சி என்பார்களே அதைப்போன்றது தான் இதுவும்.



### சட்டமன்றம்

நிருபர்:- சட்ட மன்றக் கூட்டம் எப்போது நடைபெறும்?

முதல்வர்: பேசி முடிவு எடுத்த பிறகு அறிவிக்கப்படும்.

நிருபர்:- கல்லூரிகளில் தகுதி இருந்தும் அட்மிஷன் கிடைப்பதில் சிரமம் உள்ளதே? ஏதாவது புதிய விதி முறைகள் கொண்டு வந்தாலென்ன?

முதல்வர்: என்னைப் பொறுத்த வரை பின் தங்கியவர்களில் சமுதாய ரீதியிலும் பொருளாதார ரீதியிலும் வசதி உள்ளவர்கள் உள்ளனர், முற்படுத்தப் பட்டவர்களில் பொருளாதாரத்தில் பின் தங்கியோர் இருக்கத்தான் செய்கிறார்கள். இதையெல்லாம் கருத்தில் கொண்டு ஒரு புதிய திட்டத்தை நடைமுறைப்படுத்த விரும்பினோம். ஆனால் அதற்கு எவ்வித ஆதரவும் பயன் பெறப்போகிறவர்கள் காட்டவில்லை. எனவே அதைத் திரும்பப் பெறும் நிலைமை ஏற்பட்டது.

எனவே இனி மேல் இந்தப் பிரச்சினைக்கு முடிவு சொல்ல வேண்டியவர்கள் பொது மக்கள் தான்.

நிருபர்:-சில இடங்களில் சாதிக் கலவரம் ஏற்பட்டுள்ளதே இப்போது நிலைமை எப்படி இருக்கிறது?

### எங்கும் அமைதி

முதல்வர்: தற்போது அந்த இடங்களில் எல்லாம் அமைதி ஏற்பட்டு நிலைமை நல்ல முறையில் உள்ளது. சிலர் அப்படிப்பட்ட சச்சரவுகளை பெரிதாக்க முயற்சி செய்கிறார்கள். அதில் சில சமயம் வெற்றியும் பெறுகிறார்கள். அப்படிப்பட்டவர்கள் தண்டனையும் பெறுகிறார்கள்?

நிருபர்: கலவரப் பகுதி

(2-ம் பக்கம் பார்க்க)

மோட்டார் சைக்கிளில் வந்து செயின் பறிப்பு

### ஆசாமியை கண்டவுடன் சுட உத்தரவு

சென்னை, ஜூலை10- சென்னையில் பாண்டி பஜார், மயிலாப்பூர், அடையார் ஆகிய பகுதிகளில் மோட்டார் சைக்கிளில் மர்ம ஆசாமி ஒருவன் வந்து பெண்களிடம் இருந்து தங்கச் சங்கிலிகளை பறித்துச் செல்லுவதாக புகார் வந்தது.

கடந்த 6-ந் தேதியும் இந்த மர்ம ஆசாமி இவ்வாறு பெண்களிடம் இருந்து சங்கிலிகளை பறித்துச் சென்றானாம்.

இதையடுத்து இந்த மர்ம ஆசாமியை கண்டவுடன் சுடபோலீசாருக்கு உத்தரவிடப்பட்டுள்ளது.

இவனை பிடிக்கஅமைக்கப்பட்டுள்ள விசேஷ போலீஸ் படையினரின் ஆலோசனைக் கூட்டத்தில் இவ்வாறு முடிவு செய்யப்பட்டுள்ளது.

தமிழக அரசு பரிசு சீட்டு குலுக்கல்:

## மயிலாடுதுறை-ஈரோட்டிற்கு முதல் பரிசு

சென்னை, ஜூலை 10- தமிழக அரசு பரிசுச் சீட்டு 76-வது குலுக்கல் சென்னை ராஜாஜி மண்டபத்தில் நடந்தது.

"ஜே இ" வரிசைக்கான முதல் பரிசு ஒரு லட்சம் ரூபாய் ஈரோட்டில் விற்பனையான டிக்கெட்டிற்குக் கிடைத்திருக்கிறது.

ஜே.எப். வரிசைக்கான முதல்பரிசு மயிலாடுதுறையில் விற்பனையான டிக்கெட்டிற்குக் கிடைத்திருக்கிறது.

### பரிசு பெற்ற டிக்கெட்டுகள்

### ஜே இ. வரிசை

முதல் பரிசு
(ஒரு லட்ச ரூபாய்)
**251710**
(ஈரோடு)

இரண்டவது பரிசு
(ரூபாய் பத்தாயிரம் வீதம்)
988628
(பட்டுக் கோட்டை)
486960
(மயிலாடுதுறை)

மூன்றாவது பரிசு
(ரூபாய் 5 ஆயிரம்)
555310 653783

நான்காவது பரிசு
(ரூபாய் ஆயிரம் வீதம்)

| | |
|---|---|
| 738798 | 019588 |
| 960427 | 082744 |
| 035590 | 369337 |
| 548298 | 313206 |
| 160132 | 423914 |
| 266000 | 291076 |
| 274458 | 298362 |
| 363103 | 794358 |
| 649813 | 592799 |
| 210486 | 455574 |
| 851709 | 176690 |
| 832183 | 142217 |
| 432259 | 368[illegible]21 |
| 736366 | 520513 |
| 080619 | 493218 |
| 276779 | 046548 |
| 536339 | 607732 |
| 910048 | 376436 |
| 769409 | 434177 |
| 858387 | 399586 |

ஐந்தாவது பரிசு
(ரூபாய் 500 வீதம்)
51395 21446 72347
60016 43867

### ஜே. எப். வரிசை

முதல் பரிசு
(ரூபாய் ஒரு லட்சம்)

(5-ம் பத்தி பார்க்க)

(8-ம் பத்தி தொடர்ச்சி)
**530645**
(மயிலாடுதுறை)

இரண்டாவது பரிசு
(ரூபாய் 10 ஆயிரம் வீதம்)
162258
(சென்னை)
592826
(கோவை)

மூன்றாவது பரிசு
(ரூபாய் 5 ஆயிரம் வீதம்)
714368 248330

நான்காவது பரிசு
(ரூபாய் ஆயிரம் வீதம்)

| | |
|---|---|
| 565179 | 393008 |
| 107553 | 179357 |
| 132382 | 073202 |
| 944005 | 969620 |
| 162858 | 557126 |
| 200991 | 661362 |
| 128349 | 635271 |
| 127434 | 397511 |
| 995824 | 102099 |
| 092436 | 981920 |
| 429640 | 049539 |
| 347491 | 046271 |
| 936514 | 441621 |
| 994276 | 34009[illegible] |
| 818412 | 099241 |
| 088700 | 530696 |
| 443460 | 145914 |
| 188431 | 973370 |
| 078132 | 632561 |
| 449822 | 578816 |

ஐந்தாவது பரிசு
(ரூபாய் 500 வீதம்)
01426 40048 97581
63836 52907

## சுதந்திரதினத்தன்று கோவில்களில்

## பொது வழிபாடு - பொது விருந்து

# 1.50 லட்சம் பேருக்கு இலவச ஆடைகள்

## அமைச்சர் ஆர்.எம்.வீ. அறிவிப்பு

**பழனி, ஜூலை 10- சுதந்திர நாளான ஆகஸ்ட் 15-ந் தேதியன்று, ஆலயங்களில் பொது வழிபாடும், பொது விருந்தும் நடைபெறுவதோடு, 1 லட்சத்து 50 ஆயிரம் ஏழை முதியவர்களுக்கு இலவசமாக ஆடை வழங்கப்படும் என அமைச்சர் ஆர். எம். வீ. அறிவித்தார்.**

தமிழக அரசின் அறநிலையத்துறையின் சார்பில் ஆலயங்களில் கடந்த ஆண்டு ஆகஸ்ட் 15-ந் தேதி பொது வழிபாடும் பொதுவிருந்தும் நடந்தது.

திருவேற்காடு கருமாரியம்மன்கோவிலில் கடந்த ஆண்டு நடந்த, பொது விருந்து நிகழ்ச்சியில் முதல்வர் புரட்சித்தலைவர் பங்கேற்றார்.

இந்த ஆண்டு பொது வழிபாடு, பொது விருந்து ஆகியவற்றோடு ஏழை முதியவர்களுக்கு இலவசமாக ஆடை வழங்கப்படுகிறது.

ஏழை எளியவர்களின் மனம் குளிர சுதந்திர நாளன்று இந்த புதியத் திட்டத்தை புரட்சித் தலைவரின் அரசு அமுலாக்குகிறது.

இத்திட்டம் பற்றிய அறிவிப்பை அறநிலையத் துறை அமைச்சர் ஆர். எம். வீ, பழனியில் வெளியிட்டார்.

பழனிதண்டாயுதபாணி கோயிலில் தமிழில் அர்ச்சனை தொடக்கமும், மகளிர் கல்லூரி விடுதிக்கு அடிக்கல் நாட்டு விழாவும் மற்றும் விடுதிகள் திறப்பு விழாவும் கேரள கவர்னர் ஜோதி வெங்கடாசலம் தலைமையில் நடந்தது.

கோயில் அறங்காவலர் குழுத்தலைவர் திருமதி ராதா தியாகராஜன் அனைவரையும் வரவேற்றார்.

இந்நிகழச்சியில் சட்டமன்ற உறுப்பினர்கள் பலரும், மற்றும் அறநிலையத்துறை ஆணையர் யு. சுப்பிரமணியமும் பங்கேற்றனர்.

நிகழ்ச்சியில் பேசுகையில் அமைச்சர் ஆர். எம். வீ. கூறியதாவது:

கழக அரசு பொறுப்பு ஏற்ற பிறகு அறநிலையத்துறை சார்பில் பல்வேறு மக்கள் நலத்திட்டங்கள் மேற்கொள்ளப்படுகிறது.

பழனி மகளிர்



கல்லூரிக்கு 20 லட்ச ரூபாய் செலவில் தங்கும் விடுதி கட்டப்பட உள்ளது. மற்றும் இங்கு பல்வேறு விடுதிகளும் திறக்கப்படுகிறது.

தமிழக அரசின் அறநிலையத்துறை சிறப்பாக நடை பெறுவதாக கேரள கவர்னர் ஜோதி வெங்கடாசலம் கூறினார்.

காமராஜரின் இல்

(2-ம் பக்கம் பார்க்க)

சேலத்தில் காமராஜர் சிலை வைக்கும் இடம்

# புரட்சித்தலைவர் கூட்டிய கூட்டத்தில் ஒருமனதாக முடிவு

## அரசு செலவில் அமைக்கப்படுகிறது

**சென்னை, ஜூலை 10- சேலத்தில் பீடம் அமைக்கப்பட்ட இடத்திலேயே பெருந்தலைவர் காமராஜர் சிலை அரசு செலவிலேயே அமைக்கப்படும் என முதல்வர் புரட்சித்தலைவர் இன்று அறிவித்தார்.**

சேலத்தில் காமராஜர் [illegible]லை வைப்பது குறித்து [illegible]ரச்சினை எழுந்தது [illegible]ல்லவா?

[illegible]துபற்றி அனைத்துக் [illegible]ட்சியினரையும் [illegible]ழைத்து முதல்வர் [illegible]ரட்சித்தலைவர் இன்று [illegible]கோட்டையில் ஆலோசனை நடத்தினார்.

கூட்டத்தில் பங்கேற்றவர்கள் விவரம் வருமாறு:

சட்ட அமைச்சர் பொன்னையன், தலைமைச் செயலாளர் திரவியம் சேலம் கலெக்டர் வரதராஜுலு, இ. காங்கிரஸ் தலைவர் எம். பி, சுப்பிரமணியம் திண்டிவனம் ராமமூர்த்தி, குமரிஅனந்தன், கிள்ளிவளவன், இஸ்மாயில். இரா. செழியன், கலிவரதன், சி.முத்து கிருஷ்ணன், ஆர்.கிருஷ்ணமூர்த்தி, சி.டி.ராமலிங்கம், எஸ். என். ராமசாமி உடையார், அண்ணாமலைக் கவுண்டர். கோபாலகிருஷ்ணன் செட்டியார், எம். எஸ். நாராயணன், ஆர். ராமநாதன் செட்டியார், வி.எஸ். பாண்டுரங்கன், கே.எஸ்.ஏ. அங்கமுத்து, நவநாயகம், சி. வி. பாலசுப்பிரமணியம், யூ. ராஜேந்திரன், பி. தியாகராஜன், கே. ராஜசேகரன், பெருமாள்காந்தி, செங்குட்டுவேலு ஆகியோர் கலந்து கொண்டனர்.

கூட்ட முடிவில் முதல்வர்புரட்சித்தலைவர் நிருபர்களுக்கு பேட்டியளித்தார்.

சேலத்தில் பீடம் அமைக்கப்பட்ட அதே இடத்தில் பெருந்தலைவர் காமராஜர் சிலை அரசு செலவில் வைக்கப்படும். அதே வீதியில் நகராட்சி பள்ளி உள்ளது. அதன் அருகில் விஜய ராகவாச்சாரியார் சிலை அமைக்கப்படும்.

இரண்டு சிலைகளையும், வைக்கும் செலவை அரசே ஏற்கும்.

இந்த முடிவு கூட்டத்தில் ஒருமனதாக எடுக்கப்பட்டது. அனைவரும் இதனை ஏற்றுக் கொண்டனர் என்று முதல்வர் புரட்சித்தலைவர் அறிவித்தார்.

முதல்வர் தகவல்:

### பத்திரிக்கை நிர்வாகிகள்-ஆசிரியர்கள் கூட்டம்

சென்னை, ஜூலை 10— பத்திரிகைகள் பொது மக்களுக்கு பயன்படத்தக்க வகையில் செய்திகளை வெளியிடும் பொருட்டு பத்திரிகை ஆசிரியர்கள் நிர்வாகிகள் ஆகியோர்களை அழைத்து ஆலோசனை நடத்த இருப்பதாக முதல்வர் புரட்சித்தலைவர் இன்று தெரிவித்தார்.

லண்டனில் கிரிக்கெட் போட்டி:

# இந்திய காப்டன் கவாஸ்கருக்கு கால் முறிந்தது

**லண்டன், ஜூலை 10-இங்கிலாந்தில் நடைபெறும் கிரிக்கெட் போட்டியில் விளையாடிக் கொண்டிருந்த இந்திய கேப்டன் கவாஸ்கருக்கு நேற்று கால் எலும்பு முறிந்து விட்டது. சிகிச்சைக்காக அவர் மருத்துவமனையில் சேர்க்கப்பட்டுள்ளார்.**

சுனில்கவாஸ்கர் தலைமையில் இந்திய கிரிக்கெட் அணி இங்கிலாந்துக்குச் சென்றுள்ளது. இங்கிலாந்து அணிக்கும் இந்திய அணிக்கும் இடையே ஏற்கனவே இரண்டு போட்டிகள் நடந்துள்ளன.

முதல் விளையாட்டுப் போட்டி மான்செஸ்டர் நகரில் நடந்தது. இதில் இங்கிலாந்து அணி வெற்றி பெற்றது. 2-வது போட்டி மழை காரணமாக வெற்றி தோல்வி இல்லாமல் டிராவில் முடிந்தது.

3-வது பேட்டி லண்டன் நகரில் உள்ள ஓவல் மைதானத்தில் கடந்த வியாழக்கிழமை தொடங்கியது.

முதலில் இங்கிலாந்து அணி "பேட்" செய்தது. இங்கிலாந்து ஆட்டக்காரர்கள் போத்தம், லாம்ப் ஆகியோர் விளையாடிக் கொண்டிருந்தனர். இந்திய வீரர்கள் கபில்தேவ், ஜோஷி, சாஸ்திரி ஆகியோர் மாறிமாறி பந்துக்களை வீசினார்கள்.

ஒருமுறை சாஸ்திரி, வீசியபந்தை இங்கிலாந்து வீரர் போத்தம் வேகமாக அடித்தார். அந்தப் பந்தை பிடித்து போத்தமை அவுட்டாக்க முயன்றார் கவாஸ்கர். ஆனால் பந்து எதிர்பாராத விதமாக கவாஸ்கரின் இடது கணுக்காலுக்கு மேல் பகுதியை தாக்கியது. இதனால் படுகாயம் அடைந்த கவாஸ்கர் சுருண்டு விழுந்தார். அவரை உடனே மருத்துவமனைக்குத் தூக்கிச் சென்றார்கள். இதனால் ஆட்டம் சிறிதுநேரம் தடைப்பட்டது.

கவாஸ்கருக்கு மருத்துவமனையில் "எக்ஸ்ரே" எடுத்து பார்த்தார்கள். அவருக்கு எலும்பு முறிவு ஏற்பட்டு இருந்தது கண்டுபிடிக்கப்பட்டது. அவரது இடது காலில் கட்டு போடப்பட்டுள்ளது.

டாக்டர்கள் அவருக்கு தொடர்ந்து சிகிச்சை அளித்து வருகிறார்கள். கவாஸ்கர் 6 வாரம் ஓய்வு எடுக்க வேண்டும் என்று டாக்டர்கள் கூறியுள்ளனர். ஆகவே

சுமார் 6 வாரத்துக்கு கவாஸ்கர் கிரிக்கெட் போட்டிகளில் கலந்து கொள்ளமாட்டார்.

கவாஸ்கர் ஆட முடியாமல் போனது இந்திய அணிக்கு பலத்த அடியாகக் கருதப்படுகிறது.

குளித்தலையில்

## ஆலடி அருணா பேசுகிறார்

குளித்தலை, ஜூலை 10-திருச்சி மாவட்டம் குளித்தலையில் கழக சாதனை விளக்கப் பொதுக் கூட்டம் 13-ம் தேதி மாலை பேருந்து நிலையம் அருகே நடைபெறுகிறது.

எஸ்.இராசு தலைமை வகிப்பார். ஆலடி அருணா, வழக்கறிஞர் நல்லுசாமி, எம். கே. ராஜமாணிக்கம் எம். எல். ஏ., திருச்சி கூத்தரசன், பாப்பா சுந்தரம் மற்றும் பலர் பேசுவார்கள்.

(8-ம் பத்தி தொடர்ச்சி)

செய்யும் நிலைமை கூடாது. நாங்கள் விரைவில் தேர்தல் நடத்த விரும்புகிறோம். அதற்கு அனைவரும் ஒத்துழைத்தால் நலமாக இருக்கும்.

நிருபர்:- நாராயணசாமி நாயுடு புதிய கட்சி ஆரம்பித்திருக்கிறாரே?

முதல்வர்: அது அவரது விருப்பம். அதுபற்றி எதுவும் சொல்வதற்கில்லை.

நிருபர்: காவிரி நீர் பேச்சுவார்த்தை எப்போது நடைபெறும்.

முதல்வர்: விரைவில் நடைபெறும் என்று அறிவிப்பு வந்துள்ளது.

நிருபர்:- மந்திரிசபை விஸ்தரிப்பு உண்டா?

முதல்வர்: பத்திரிகைகளில்தான் பெருகி இருக்கிறது.

நிருபர்:- வாகனங்களுக்கு லைசென்ஸ் வழங்கும் உரிமை போலீசாரிடம் இருந்தது. பின்னர் அது ஆர். டி. ஓ. விடம் மாற்றப்பட்டது. மீண்டும் போலீசிடமே ஒப்படைக்கப்படுமா?

முதல்வர்: போலீசிடம் இருக்கும் போதே பல புகார்கள் கூறப்பட்டன. இப்போது இதிலும் புகார்கள் கூறுகிறீர்கள். இதுபற்றியும் பரிசீலிக்கலாம்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

அமைச்சர் அரங்கநாயகம் திறந்து வைத்தார்:

# சிங்கப்பூரில் கோ-ஆப் டெக்ஸ் விற்பனை நிலையம்

**சிங்கப்பூர், ஜூலை 10- சிங்கப்பூரில் கோ-ஆப் டெக்ஸ் விற்பனை நிலையத்தை அமைச்சர் அரங்கநாயகம் நேற்று திறந்து வைத்தார்.**

வெளிநாட்டில் துவக்கப்படும் முதல் சில்லறை விற்பனை நிலையம் இது ஆகும்.

கல்வி அமைச்சர் அரங்கநாயகம் ஒரு மாத கால வெளி நாட்டுச் சுற்றுப்பயணம் மேற்கொண்டு இருக்கிறார்.

அவருடன் கல்வித்துறை செயலாளர் சி. ராமதாசும் சென்றுள்ளார்.

சீனா உட்பட பல்வேறு ஆசிய நாடுகளுக்குச் சென்று விட்டு நேற்று அமைச்சர் அரங்கநாயகம் சிங்கப்பூர் வந்தார்.

சிங்கப்பூரில் கோ ஆப் டெக்ஸ் சில்லறை விற்பனை நிலையத்தை அமைச்சர் திறந்து வைத்தார்.

கைத்தறித்துணி வகைகளை வெளிநாடுகளுக்கு அதிக அளவில் ஏற்றுமதி செய்ய தமிழக அரசு தீவிர முயற்சிகளை எடுத்து வருகிறது.

தென் கொரியா, தாய்லாந்து, ஹாங்காங், சிங்கப்பூர் முதலிய நாடுகளில் தமிழக கைத்தறி ஏற்றுமதியை அதிகரிக்கும் வாய்ப்புகள் பற்றி பேச்சுவார்த்தை நடத்தினேன்.

தமிழகத்தில் இருந்து ஆண்டுக்கு ரூ. 200 கோடி மதிப்புள்ள கைத்தறி துணி வகைகள் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதிசெய்யப்படுவதாக அமைச்சர் அரங்கநாயகம் தெரிவித்தார்.

டெல்லியில

## காமராஜர் சிலையை பிரதமர் திறக்கிறார்

சென்னை, ஜூலை 10-புதுடெல்லியில் பெருந்தலைவர் காமராஜர் முழு உருவச்சிலையை பிரதமர் இந்திரா காந்தி ஆகஸ்ட் மாதத்தில் திறந்து வைப்பார்.

# முதல்வர் பேட்டி...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

களில் 6 மாத காலத்திற்கு எந்த மதப் பிரச்சாரமும் கூடாது என்று கூறி இருந்தீர்களே?

முதல்வர்:- நான் அதை அறிவித்த போது எத்தனை பேர் ஆதரித்து அறிக்கை வெளியிட்டார்கள்? ஒருநல்லதிட்டத்தை அறிவிக்கும் போது மற்றவர்கள் அதை ஆதரிக்க வேண்டாமா? மக்களின் ஆதரவு இல்லாமல் எந்த அரசும் எதையும் செய்ய முடியாது. இப்படிப்பட்ட பிரச்சினைகளில் அனைவரும் ஒத்துழைக்க வேண்டும்.

நிருபர்: சர்வகட்சிக் குழு ஒன்றை அமைத்தீர்களே?

முதல்வர்: சர்வகட்சிக் குழுவுக்கு சாதிப் பிரச்சினை தெரியாதா? அரசியல் கட்சிகளில் உள்ள சிலர் சாதிக்கட்சிகளில் இல்லை என்ற உத்திரவாதம் உண்டா?

நிருபர்:- இலவசஉணவு திட்டம் எவ்வாறு நடைபெறுகிறது.

முதல்வர்:- பெரும்பாலும் சுமுகமாக நல்ல முறையில் நடந்து வருகிறது. இன்னும் இரண்டொரு வாரங்களில் இந்தத் திட்டம் மிகச் சீராக நடைபெறும். அரசு நிறுவனமான டான்சி போன்ற நிறுவனங்களில் இருந்து மதிய உணவுக்கான பாத்திரங்கள் வாங்க வேண்டும் என்று உத்தரவிட்டிருந்தோம். அதன் அடிப்படையில் 1000க்கு மூன்று அல்லது இரண்டு என்ற வகையில் சில குறைகள் ஆங்காங்கு உள்ளன. அவற்றை விரைவில் நீக்கி அரசின் நோக்கத்தை விரைவில் நிறைவேற்ற முடியும்.

## வெடி விபத்து: அரசு உதவி

நிருபர்:- பட்டாசு விபத்து, வெடி விபத்து போன்றவற்றில் இறந்தவர்கள் குடும்பத்திற்கு உதவித் தொகை விரைவில் கிடைக்க நடவடிக்கை எடுக்கப்படுமா?

முதல்வர்:- சில தொழில்கள் செய்யும் போது விபத்து ஏற்படும் நிலைமை உண்டு. அதைத் தடுக்கும் வழிமுறைகளைக் கடைப்பிடிக்க நடவடிக்கை எடுக்கப்படும். விபத்து இல்லாத ஒரு நிலைமைஉருவாக்கப்படும். இப்படிப்பட்ட விபத்துக்களில் பாதிக்கப்பட்டவர்கள் குடும்பம் மாவட்ட ஆட்சித்தலைவருடன் தொடர்பு கொண்டால் உடனடியாக உதவி கிடைக்கும்.

நிருபர்:- சென்னை நகரில் சாலை விபத்துக்களை தடுக்க ஏற்பாடுகள் செய்யப்படுமா?

முதல்வர்:- லாரிகளை ஒரு குறிப்பிட்ட இடத்திற்கு மேல் நகருக்குள் நுழையாமல் நிறுத்தி வைத்து அங்கிருந்து பொருள்களை சிறு வண்டிகள் மூலம் ஏற்றி நகருக்குக் கொண்டு வருவதற்கான யோசனை பரிசீலிக்கப்படுகிறது. எந்தெந்த இடங்களில் லாரிகளை நிறுத்தலாம் என்றும் பரிசீலிக்கப்படுகிறது. ஸ்கூட்டர், மோட்டார் சைக்கிள் ஓட்டுபவர்களும் குறிப்பாக ஆட்டோ ரிக்‌ஷா ஓட்டுபவர்களும் அதிக வேகம் போகாமல் கட்டுப்படுத்த வேண்டும்.

## பறக்கும் படை

ஒரு சந்தில் இருந்து வெளியே வரும்போது வாகனத்தை நிறுத்தி கவனித்துப் பின்னர் வருவது என்ற முறையில் செயல்பட்டால் பெரும்பாலும் விபத்துக்களைத் தடுக்க முடியும். போக்குவரத்து விதிமுறைகளைக்கவனிக்க பறக்கும்படை அமைக்கப்படும்.

நிருபர்:- சிலஆட்டோக்காரர்கள் அதிக பணம் கேட்கும்போது அதுபற்றி போலீசாரிடம் சொன்னால்அதற்குநடவடிக்கை எடுக்காமலே இருக்கிறார்களே?

முதல்வர்:- போலீசுக்கு அதிகாரம் உண்டு. எந்தப் போலீஸ்காரர் அப்படி சொன்னார் என்று சொன்னால் அதுபற்றி கவனிக்க முடியும்.

நிருபர்: தி. மு. க. போராட்டம் நடத்துகிறதே அதுபற்றி உங்கள் கருத்து என்ன?

## மக்கள் ஆதரவற்றது போராட்டமல்ல

முதல்வர்: போராட்டம் நடைபெறுகிறதா? மக்கள் அது பற்றிக் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. மக்கள் கவலைப்பட்டால் அது போராட்டம். தினசரி போராட்டம் நடத்தினால் அதற்கு என்ன மரியாதை என்று தெரியாதா? தேவையின்றி போராட்டம் அவசியம் தானா? கழகமும், தி. மு. க. வும் இணைவது பற்றிகி. ஆ. பெ., பட்நாயக் போன்றவர்கள் முயற்சி எடுத்தார்கள்.

அந்த நேரத்தில் நான் மலையாளி இல்லையா? அந்த நேரத்தில் நான் முதல்வராக ஆவதில் தப்பில்லை என்று கருதினார்களா? இரண்டு கேரளம் உருவாகலாமா? என்று இப்போது கேட்கிறார்கள். இரண்டு கேரளம் அல்ல. மூன்று கேரளம் அல்லவா—சிங்கப்பூர் ஜனாதிபதியே ஒரு மலையாளிதானே? அமெரிக்காவில்அண்ணா சிகிச்சை பெற்று வந்தபோது அவர் எழுதிய கடிதம் என்னிடம் உள்ளது.

நண்பர் மாறன் நியூயார்க்கில் இருந்து எழுதியகடிதமும்இருக்கத்தான் செய்கிறது.

நிருபர்:- கருணாநிதியைப் பற்றி பேசக்கூடாது என்று அமைச்சர் குழந்தைவேலுவுக்கு நீங்கள் அறிவுரை கூறிஇருந்தீர்களா?

முதல்வர்:- அமைச்சர் குழந்தைவேலுவே இதுபற்றி கூறியுள்ளார். அந்தக் கட்சியின் தலைவரைப் பற்றி (கருணாநிதி) பேசியதற்கு அவர்களது கட்சி நடவடிக்கை எடுத்துள்ளது. இனிமேல்அவர்கள் எங்களைப் பற்றிப் பேசினால் அந்த நிலைமைபற்றி கழகத்தின் பொதுக்குழு, செயற்குழு கூடி நடவடிக்கை எடுத்துக் கொள்ளும். இது முதலமைச்சரின் பதில அல்ல. அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகத் தொண்டனின் பதில்.

நிருபர்:- கருணாநிதி பற்றிப்பேச வேண்டாம் என்றுகுழந்தைவேலுவுக்கு கூறி இருந்தீர்களா?

முதல்வர்: அவரே விளக்கமாகச் சொல்லி இருக்கிறார்.

கருணாநிதி இனியும் தொடர்ந்து சொன்னால் கழகம் நடவடிக்கை எடுக்கும் என்று. முள்ளை முள்ளால் எடுக்கலாம். மண்வெட்டியால் எடுக்க முடியாது.

உண்ணாவிரதம் என்கிறார்கள். எதற்கு உண்ணாவிரதம் தமிழ்நாடு என்று பெயர் வைப்பதற்காகசங்கரலிங்கனார் உண்ணா விரதம் இருந்தார்.

இந்தப் பிரச்சினையை யாராவது கவனிக்காமல் புறக்கணிக்க முடியுமா? முடியாது. ஆனால் கருணாநிதி உண்ணாவிரதம் என்று கூறுவது நாட்டுப் பிரச்சினைக்காக அல்ல. தனிப்பட்ட காழ்ப்புணர்ச்சியில் அப்படி அறிவித்திருக்கிறார்.

நிருபர்:- விபத்துக்கள் அதிகமாவதற்கு சாலை விதிகள் பராமரிக்கப்படவில்லை என்பதும் ஒரு காரணம் தானே?

முதல்வர்;- இதற்காக நடமாடும் வழக்குமன்றம் நடமாடும் போலீஸ் நடவடிக்கைத்துறை ஆகியவை வர இருக்கின்றன. வெகு விரைவில் இவையெல்லாம் வர இருக்கின்றன. ப்ளையிங் ஸ்குவார்டும் தக்க நடவடிக்கை எடுக்கும்.

நிருபர்:- சாதிக் கலவரத்தை ஒடுக்க கடும் நடவடிக்கை எடுக்கப்படுமா?

முதல்வர்: தேசிய பாதுகாப்பு சட்டமே (என். எஸ். ஏ.) மிகக் கடுமையானதுதான். கலவரங்களைத் தூண்டிவிடுபவர்கள் மீது என். எஸ். ஏ.யின் கீழ் நடவடிக்கை எடுப்போம்.

இன்னும் அந்த சட்டத்தை சரியாக நாங்கள் பயன்படுத்தவில்லை. கையில் ஆயுதம்உள்ளது. அதை நாங்கள் பயன்படுத்தாமல் இருப்போம் என்று பொருள் அல்ல.

நிருபர்:- பினாமி நிலத்தைக் கண்டுபிடிக்க மீண்டும் மசோதா வருமா?

முதல்வர்:- எவ்வளவு சீக்கிரம் வரவேண்டுமோ அவ்வளவு சீக்கிரம் வரும். ஒரு உத்திரவு அமல்படுத்தப்பட இருக்கிறது. யார் யார் பெயரில் எவ்வளவு நிலம் இருக்கிறது என்பதை கண்டுபிடிக்க புள்ளி விவரங்கள் சேகரிக்கப்படும்.

3 ஆண்டுகளில் இந்த பணிமுடிவடையும்இப்படி நிலங்களைக் கண்டுபிடித்து பதிவு செய்யும் பணியில் ஆயிரக்கணக்கானவர்கள் ஈடுபடுத்தப்படுவார்கள்.

இதனால் பினாமி நிலம் பெரும் அளவில் கட்டுப்படுத்த முடியும் யார் யார் பெயரில் எவ்வளவு நிலம் இருக்கிறது என்று கண்டுபிடித்து பதிவு செய்வதன் மூலம் ஓரளவுக்கு இதைக் கட்டுப்படுத்த முடியும்.

நிருபர்:- கிராம அதிகாரிகள் எப்போது நியமிக்கப்படுவார்கள்.

முதல்வர்: தற்போதுவேலையில் இருந்து நீக்கப்பட்டவர்களில் மீண்டும் வேலைக்குச் சேர்த்துக் கொள்ள எத்தனை பேர்களுக்குத் தகுதி உள்ளது என்று பரிசீலிக்கப்படுகிறது. அந்தக் கணக்கை வைத்துக் கொண்டு புதிதாக சேர்க்கப்படுவார்கள்.

## பஞ்சாயத்துதேர்தல்

நிருபர்:- பஞ்சாயத்து தேர்தல் எப்போது நடைபெறும்.

முதல்வர்:- இந்தப் பிரச்சனையை தயவு செய்து சுப்ரீம் கோர்ட்டுக்கு யாரும் இழுத்துக் கொண்டு போகாமல் இருக்குமாறு கேட்டுக்கொள்கிறேன்.

இரண்டொரு மாதத்தில் தேர்தல் நடத்த ஆசைப்படுகிறோம். வழக்கு மன்றத்திற்குப் போய் காலத்தை நீட்டித்து அதற்குப் பிறகு தேர்தல் நடத்தாமல் இருப்பதற்கு தமிழ்நாடு அரசு தான் காரணம்என்று பிரச்சாரம்

(3-ம் பத்தி பார்க்க)

ஏழைக் குழந்தைகளுக்கு

# இலவச சத்துணவுத் திட்டம்: கண்காணிக்க 800 அதிகாரிகள்

**சென்னை, ஜூலை 10- ஏழைக்குழந்தைகளுக்கு இலவச சத்துணவு வழங்கும் திட்டத்தைக் கண்காணிக்க 800 அதிகாரிகள் நியமிக்கப்பட்டுள்ளதாக பள்ளிக் கல்வி டைரக்டர் வெங்கடசுப்பிரமணியம் கூறினார்.**

மதுரை மாவட்டத்தில் ஏழைக் குழந்தைகளுக்கு இலவச உணவு வழங்கும் திட்ட அமுல் பற்றிய ஏற்பாடுகளை பள்ளிக் கல்வி டைரக்டர் வெங்கடசுப்பிரமணியம் பார்வையிட்டார்.

பிறகு நிருபர்களிடம் பேசுகையில் வெங்கடசுப்பிரமணியம் கூறியதாவது:-

மாநிலம் முழுவதும் அமுல்படுத்தப்பட்டுள்ள இலவச சத்துணவுத் திட்டத்தை மேற்பார்வையிட ஒரு தனிப் பிரிவு ஏற்படுத்த முடிவு செய்யப்பட்டுள்ளது.

இந்தத் தனிப்பிரிவு, மாநிலம் முழுவதும் இத்திட்டம் தங்கு தடையின்றி சீராக செயல்படுத்துவதற்கான நடவடிக்கைகளை மேற்கொள்ளும்.

இத்திட்டம் சரிவர செயல்பட மாநிலம் முழுவதற்கும் 800 கண்காணிப்பு அதிகாரிகள் நியமிக்கப்பட்டுள்ளனர்.

இவர்கள் சுமார் 30 ஆயிரம் சத்துணவு தயாராகும் நிலையங்களை அவ்வப்போது நேரில் சென்று கண்காணிப்பார்கள்.

ஒவ்வொரு சத்துணவுக் கூடத்திற்கும் இவ்வாறு சென்று பார்க்கும், அதிகாரி அங்குள்ள தேவைகளை குறித்து சென்னையில் உள்ள சத்துணவுத்திட்டத்தனிப்பிரிவுக்கு தபால் மூலம் தெரிவிப்பார்.

இந்தத் தபால் கிடைத்தவுடன், தனிப்பிரிவால் தேவையானநடவடிக்கைகள்மேற்கொள்ளப்படும்.

இத்திட்டம் அமுல்படுத்தப்படுவதால் ஆசிரியர் நலன் எந்த விதத்திலும் பாதிக்கப்படாது. அதற்கான நடவடிக்கைகளும் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

இவ்வாறு வெங்கடசுப்பிரமணியம் கூறினார்.

## 4 கார்கள் திருட்டு

சென்னை, ஜூலை 10-அண்ணா நகரைச்சேர்ந்த அரவிந்த்கார் நிறுவனத்தில் ஒருகார் திருட்டுப் போனது. இது சம்பந்தமாக குற்றப்பிரிவு இன்ஸ்பெக்டர் கோபாலகிருஷ்ணன் புலன் விசாரித்து தாமஸ், ரங்கராஜன் ஆகியோரை கைது செய்தார். அவர்கள் கொடுத்த தகவலின் பேரில் நடராஜன், ஜெபராஜ். ஆகியோர் கைதுசெய்யப்பட்டனர். 4 கார்களை அவர்கள் திருடியிருப்பது கண்டுபிடிக்கப்பட்டது. போலீசார் புலன் விசாரணை நடத்தி வருகிறார்கள்.

## இலவச ஆடைகள்

(1-ம் பக்க தொடர்ச்சி)

லத்தை அரசுடமையாக்கும் விழாவிலும், பின்னர் மகாகவி பாரதியார் நூற்றாண்டு விழாவிலும் கேரள கவர்னர் ஜோதியம்மாள் பங்கேற்றார். தற்போது இங்கும் வந்து விழாவைச் சிறப்பித்துள்ளார்.

இங்கு மகளிர் கல்லூரி மாணவிகளின்வசதிக்காக 20 லட்சரூபாய் செலவில் விடுதிகட்டப்படவுள்ளது.

கழக ஆட்சியில், அறநிலையத்துறையின் சார்பில் பல்வேறு மக்கள் நலத் திட்டங்களை மேற்கொண்டு செயலாற்றி வருகிறோம்.

கழக ஆட்சியில் கோயில்களில் தமிழ் அர்ச்சனை புதிய உத்வேகம் பெற்றுள்ளது.

கடந்த ஆண்டு சுதந்திர தினமான ஆகஸ்ட் 15-ந் தேதியன்று ஆலயங்களில் பொது வழிபாடு மற்றும் பொது விருந்து நடந்தது.

இந்த ஆண்டும்ஆகஸ்ட் 15-ந் தேதி பல்வேறு ஆலயங்களில் பொது வழிபாடும், பொது விருந்தும் விரிவானமுறையில் நடத்தப்படும்.

இந்த ஆண்டு. பொது வழிபாடு பொது விருந்து ஆகியவற்றோடு, ஏழை முதியவர்கட்கு இலவச ஆடைகள் வழங்கப்படும்.

இதன் மூலம் சுமார் 1 லட்சத்து 50 ஆயிரம் ஏழை முதியவர்கள் பயன் பெறுவார்கள்.

கழகம் ஆட்சிப்பொறுப்பேற்ற பிறகு ஆலயங்களில் வருமானம் அதிகரித்துள்ளது.

பழனி கோவிலின் வருமானம் கடந்த 5 ஆண்டுகளில் 2 மடங்காக அதிகரித்து தற்போது 2 கோடியே 66 லட்சம் ரூபாயாக ஆகியுள்ளது.

அறநிலையத் துறையின் சார்பில் உள்ள கோயில்களின் வருமானம் முறையாக பாதுகாக்கப்படுவதோடு, கணக்குகளும், ஒழுங்காக கண்காணிக்கப்பட்டு வருகிறது.

பழனியில் கழிப்பிட வசதிக்காக கட்டிடங்கள் கட்ட கோவில் நிர்வாகம் திட்டம் தீட்டி அனுப்பினால் அறநிலையத் துறை அவற்றை பரிசீலிக்கும்.

மக்களின் நலன்களை அதிகரிக்கும் வகையில் பல்வேறு திட்டங்களை புரட்சித்தலைவரின் கழக அரசு நிறைவேற்றி வருகிறது.

இவ்வாறு அமைச்சர் ஆர்.எம்.வீ. கூறினார்.

## கழகத் தோழர் மறைவு

சென்னை, ஜூலை 10 சென்னை 73 வது வட்ட கழகத் தோழர் ராதா கிருஷ்ணன் நேற்று இரவு காலமானார்.

வ. கோதண்டராமன். நா. ரா. பாபு. நெல்லை பழனி. கோ. தே. சீனிவாசன், வி.என். அப்துல் ஜலீல், முகமது யாகியா, பாலன் மற்றும் ஏராளமான கழகத் தோழர்கள் அனுதாபம் தெரிவித்தனர்.

மாநிலங்களின் மொத்த ஓவ்டிராப்ட்

ரூ 2085 கோடி:

# ஓவர்டிராப்ட் வாங்காத மாநிலம் தமிழ்நாடு: மத்தியமந்திரி தகவல்

**புதுடெல்லி, ஜூலை 10 தென் மாநிலங்களில் தமிழ்நாடு மட்டுமே ஓவர்டிராப்ட வாங்காத மாநிலம் என்று நாடாளுமன்றத்தில மத்திய நிதியமைச்சர் வெளியிட்ட ஒரு அறிக்கையில் தெரிவித்தார்.**

மாநிலங்களின் மொத்த ஓவர் டிராப்ட் ரூ. 2085 கோடிஎன்றும் அவர் தெரிவித்தார்.

மாநிலங்களின் ஓவர் டிராபட விவரங்கள்பற்றி நாடாளுமன்றத்தில் நிதி அமைச்சர் ஒரு அறிக்கை வெளியிட்டார்.

எல்லா மாநிலங்களும் வாங்கி இருக்கும் ஓவர் டிராப்டின் மொத்த தொகை ரூ. 2085.69 கோடியாகும்.

ரிசர்வ் வங்கியிடம் இருந்து ஓவர்டிராப்ட் வாங்குவதில் மேற்கு வங்கமே முதலிடம் பெற்றுள்ளது.

மேற்கு வங்கம் ரூ. 402.53 கோடி அளவுக்கு ஓவர் டிராப்ட பெற்றுள்ளது.

அதற்கு அடுத்தபடியாக ராஜஸ்தான் ரூ. 304.35 கோடியும், பீகார் ரூ. 218.17 கோடியும் பெற்றுள்ளன.

தென் மாநிலங்களில் கேரளம் ரூ. 128.17 கோடியும், கர்நாடகம் ரூ. 53.79 கோடியும், ஆந்திரம் ரூ. 37.03 கோடியும் பெற்றுள்ளன.

தென்மாநிலங்களில் தமிழகம் மட்டுமே ஓவர் டிராப்ட் வாங்கவில்லை. ஏராளமான கையிருப்பு நிதி வசதியுள்ள ஆந்திரம் மீண்டும் மீண்டும் ஓவர் டிராப்ட் வாங்கி இருந்தது.

ஆந்திர மாநிலம் ஜூன் வரை ரூ. 37 கோடி பெற்று இருக்கிறது.

ரிசர்வ் வங்கியில் ஓவர்டிராப்ட் வசதியை தமிழகம் மட்டும்தான் பெறவில்லை என்று நிதி அமைச்சர் அறிக்கையில் கூறப்பட்டுள்ளது.

# சென்னைமாநகராட்சிக்கு பல்வேறு வசதிகள்: முதல்வர் பரிசீலனை

## அமைச்சர் குழந்தைவேலு தகவல்

**சென்னை, ஜூலை 10- சென்னை மாநகராட்சிக்கு செய்ய வேண்டிய பல்வேறு வசதிகள் பற்றி முதல்வர் புரட்சித்தலைவர் எங்களிடம் எடுத்துக் கூறியிருக்கிறார் என்று அமைச்சர் குழந்தைவேலு கூறினார். வசதிகளை செய்வதற்கு எவ்வளவு செலவாகும் அதை எப்படி சரிக்கட்டுவது என்றும் முதல்வர் பரிசீலித்து வருகிறார் என்றும் அமைச்சர் தெரிவித்தார்.**

சென்னை மாநகராட்சி சார்பில் ''மக்கள் குறை கேட்கும் நாள்'' நேற்று மாலை கோடம்பாக்கத்தில் நடந்தது. மாநகராட்சி தனி அதிகாரி சுந்தரராஜ், கமிஷனர் கருப்பண்ணன், துணைக் கமிஷனர் குணசேகரன் மற்றும் அனைத்துத்துறை அதிகாரிகளும் இந்த நிகழ்ச்சிக்கு வந்திருந்தனர்.

உள்ளாட்சித் துறை அமைச்சர்குழந்தைவேலு அப்போது பொதுமக்களின் குறைகளை நேரில் கேட்டறிந்தார். அமைச்சரிடம் பொதுமக்கள் ஏராளமான பேர் தங்களது கோரிக்கைகள் அடங்கிய மனுக்களைக் கொடுத்தனர்.

### உடனுக்குடன் தீர்வு

அமைச்சரிடம்கொடுத்த மனுக்களை துணைக் கமிஷனர் குணசேகரன் உடனடியாகப் பிரித்து சம்பந்தப்பட்ட அதிகாரியிடம் கொடுத்தார். அதிகாரிகள் அந்த மனுக்களை ஆய்வு செய்தனர். மனுக்களில் கூறப்பட்ட குறைகள் எவ்வளவு காலத்திற்குள் தீர்க்கப்படும் என்ற விவரத்தை அந்த மேடையிலேயே அமைச்சர் முன்னால் அறிவித்தனர். மக்களின் குறைகளை கேட்டறிந்த அமைச்சர் குறைகளை விரைவில் தீர்க்கவேண்டும் என்றும் அதுகுறித்து திட்டவட்டமான பதில்களை பொதுமக்களுக்கு தெரிவிக்க வேண்டும் என்றும் அதிகாரிகளிடம் கூறினார்.

இந்தக் கூட்டத்தில் பொதுமக்கள் எழுப்பிய பல்வேறு சந்தேகங்களுக்கும் அப்போது பதில் அளிக்கப்பட்டது.

இந்தக் கூட்டத்தில் பேசிய தனி அதிகாரி சுந்தரராஜ் இதுவரை சென்னையில் 11 இடங்களில் இப்படிப்பட்ட ''குறைக்கேட்கும் நாள்'' நடந்தன என்றும் இதுவரை 30 வட்டங்கள் இந்தத் திட்டத்தின் கீழ் முடிக்கப்பட்டுள்ளன என்றும் கூறினார்.

### உற்சாகம்

கமிஷனர் கருப்பண்ணன் பேசும்போது இத்தகைய நிகழ்ச்சிகளில் 919 மனுக்கள் பொது மக்களிடம் இருந்து பெறப்பட்டது என்றும் மக்களின் குறைகள் போக்கப்பட்டது என்றும் கூறினார்.

அமைச்சரே மக்களைச் சந்தித்து நேரடியாக அவர்களது குறைகளைக் கேட்பது மாநகராட்சி அதிகாரிகளுக்கு உற்சாகத்தை அளிக்கிறது என்றும் அவர் குறிப்பிட்டார்.

பொதுமக்களின் பாராட்டு தலுக்கும் மகிழ்ச்சிக்கும் இடையே அமைச்சர்குழந்தைவேலு பேசினார்.

அவர் கூறியதாவது:-

இத்தகைய நிகழ்ச்சிகளில் பொதுமக்கள் தரும் மனுக்களில்கூறப்பட்டுள்ள குறைகளை சம்பந்தப்பட்ட அதிகாரிகள் பரிசீலனை செய்து குறைகள் எவ்வளவு காலக்கட்டத்துக்குள் போக்கப்படும் என்று கூறுவார்கள்.

மாநகராட்சிக்கு புதிய தனி அதிகாரியும், புதிய கமிஷனரும் பொறுப்பேற்றிருக்கிறார்கள்.

தனி அதிகாரி சுந்தரராஜன் செயல்திறன் மிக்கவர். கமிஷனர் கருப்பண்ணன் மிகவும் பொறுப்புடையவர் அவர் என்னுடைய ஆசிரியர். பொள்ளாச்சிக் கல்லூரியில் படித்துக் கொண்டிருக்கும்போது எனக்கு பொருளாதார ஆசிரியராக இருந்தவர்.

ஆசிரியரும்,மாணவரும் ஒரே இடத்திலிருந்து பணிபுரியும் வாய்ப்பு புரட்சித்தலைவர் ஆட்சியில் அமைந்திருக்கிறது.

தமிழக அரசு ரூ. 250 கோடி செலவில் 368 பஞ்சாயத்து யூனியன்களில் தன்னிறைவுத் திட்டத்தை நிறைவேற்றியிருக்கிறது.

இந்த ஆண்டு 137 பேரூராட்சிகளில் தன்னிறைவுத் திட்டம்செயல்பட இருக்கிறது. இதற்காக 10கோடி ரூபாய் செலவிடப்படும்.

இதுபோல் 20 நகரசபைகளில் தன்னிறைவுத் திட்டம் 5 கோடி ரூபாய் செலவில் செயல்படுத்தப்படும்.

### முதல்வர் ஆலோசனை

மூன்று நாட்களுக்கு முன்பு முதல்வர் புரட்சித்தலைவர், என்னையும் தனி அதிகாரி, கமிஷனர் ஆகியோரை அழைத்து மாநகராட்சியில் செய்ய வேண்டிய பல்வேறு வசதிகளை எடுத்துக்கூறினார். பல வசதிகளை மாநகராட்சிக்கு செய்வதற்காக எவ்வளவு செலவாகும்? அதை எப்படி சரிக்கட்டுவது என்பது குறித்தும் அவர் பரிசீலித்துக் கொண்டு இருக்கிறார்.

சென்னையில் பல இடங்களில் தெருவிளக்குகள் சரிவர எரியவில்லை என்று கூறினார்கள். இதற்காக அதிகாரிகள் ஒருவிசேஷக் குழு அமைத்து இரவு நேரங்களில் முக்கிய சாலைகளில் மட்டும் அல்லாது, மூலைமுடுக்குகளில் உள்ள சாலைகளிலும் ரோந்து சுற்றி வர ஏற்பாடு செய்திருக்கிறார்கள்.

எங்கெங்கே விளக்குகள் சரிவர எரியவில்லையோ. அங்கே உடனடியாக விளக்குகள் எரியச்செய்ய வேண்டும்என்று அதிகாரிகளிடம் கேட்டிருக்கிறேன். குறைகள் கேட்கும் நாட்களில் பொதுமக்களிடம் பெற்ற மனுக்களில் கூறப்பட்டுள்ள குறைகளை தீர்க்க முடியும் என்றால் முடியும் என்று அதிகாரிகள் பதில் அளிக்கவேண்டும். குறைகளைத் தீர்க்க முடியாது என்றால் முடியாது என்று அப்போதே சொல்லிவிடுவது தான் நல்லது.

### ஒத்துழைப்பு

அதைவிட்டுவிட்டு 10 நாட்களில் தீர்த்து விடுகிறேன்-அல்லது 15 நாட்கள் கெடு என்று சொல்லி பின்னர் தீர்க்கப்படவில்லை என்றால் பொதுமக்களிடம் அரசுக்கு கெட்ட பெயர் ஏற்படும்.

பொது மக்களிடம் குறைக் கேட்கும் இந்த முறை வெற்றிகரமாக செயல்பட அனைவரும் ஒத்துழைப்பு தரவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். காலக் கெடுவுக்குள் குறைகள் தீர்க்கப்படவில்லை என்றால் அரசுக்கு இது பற்றி தெரிவிக்கவேண்டும்.

இவ்வாறு அமைச்சர் குழந்தைவேலு கூறினார்.

---

டி.வி.யில் கல்வி ஒலிபரப்பு:

## சபாநாயகர் ராசாராம் கோரிக்கை

சென்னை,ஜூலை10— டெலிவிஷனில் கல்வி ஒளிபரப்பு என தனி சானலில் நடைபெற வேண்டும் என தமிழ்நாடு சட்டசபை சபாநாயகர் கே. ராசாராம் கூறினார்.

1982-83-ம் ஆண்டுக்கான கல்வி ஒளிபரப்பை டெலிவிஷனில் துவக்கி வைத்து பேசுகையிலேயே சபாநாயகர் மேற்கண்ட கருத்தை வெளியிட்டார்.

நிகழ்ச்சிக்கு பள்ளிக் கல்வி டைரக்டர்வெங்கட சுப்பிரமணியம் தலைமை வகித்தார்.

தற்போது டெலிவிஷனில், செவ்வாய், வெள்ளிக் கிழமைகளில் கல்வி ஒளிபரப்பு நடத்தப் படுகிறது.

---

## ரஷ்யா விமான விபத்து: இந்தியர் மரணம்

மாஸ்கோ, ஜூலை 10- மாஸ்கோ அருகே ரஷிய விமானம் விழுந்து பயங்கர சேதம் ஏற்பட்டது.

இதில் இறந்தவர்களில் வி. ராமகிருஷ்ணாஎன்பவரும் ஒருவர். 67 வயதான இவர் இந்தியாவைச் சேர்ந்தவர்.

---

என்ஜினியருக்கு

உயர்நீதிமன்றம் கண்டனம்:

## அரசு பைல் ரகசியங்களை அம்பலப்படுத்துவதா?

**சென்னை ஜூலை 10- அரசாங்க பைல்களில் உள்ள ரகசியங்களை வெளியே தெரிவிப்பது முறையானதல்ல என்று என்ஜினியர் ஒருவரது செயலுக்கு சென்னை உயர்நீதி மன்றம் கண்டனம் தெரிவித்துள்ளது.**

தமிழ்நாடு குடிநீர் வாரிய என்ஜினியர் ஒருவருக்கு உயர்நீதி மன்றம் இந்தக் கண்டனத்தை தெரிவித்துள்ளது.

குடிநீர் வாரியத்தைச் சேர்ந்த செயற்பொறியாளர் டி.தாமோதரராவ் உயர்நீதி மன்றத்தில் ஒரு வழக்கைத் தொடர்ந்தார்.

நீதிபதி சத்தியதேவ் இதை விசாரித்தார்.

மேற்பார்வை பொறியாளர் பதவி உயர்வை தாமோதரராவ் பெற விரும்பினார்.

ஆனால் இதில் சில டிப்ளமோ என்ஜினியர்களுக்கு முதலிடம் தரப்பட்டுள்ளதாக ரகசிய பைல்களில் இருந்து தகவல் தெரிவித்துள்ளார்.

இப்படிப்பட்ட ரகசிய தகவல்களை வெளியே சொல்வதுசரியானது அல்ல. அதிகாரிகள் ரகசிய விதிகளுக்கு இதுமுரணானது.

மேற்பார்வைபொறியாளர் பதவி உயர்வுக்கு சில பெயர்கள் கொண்ட பேனல் பற்றி குறிப்பிட்டு இருக்கிறார்.

பெயர்கள் மாற்றப்பட்டதாகவும் சொல்லி இருக்கிறார்.

பேனலில் இருக்கும் பெயர்களைப் பற்றி அரசு செயலாளர் முடிவுஎடுக்கவில்லை.

ஆகவே இதுபற்றி இப்போது முன்கூட்டி கருத்து சொல்வது முறையாகாது. ஆகவே மனுவைத் தள்ளுபடிசெய்கிறேன் என்று நீதிபதி சத்தியதேவ் தீர்ப்பு வழங்கினார்.

---

மாநிலங்களவையில்

## எதிர்க்கட்சிகள் வெளிநடப்பு

புதுடெல்லி, ஜூலை 10— சிறுபான்மைக் கமிஷன் தலைவராக உள்ள எச். எம். பேக். ஒரு அறிக்கை வெளியிட்டுள்ளார்ஜனாதிபதிதேர்தலில் ஜெயில்சிங்கை ஆதரித்தும், எச்.ஆர்.கன்னாவை எதிர்த்தும் கருத்துக்களை வெளியிட்டுள்ளார்.

இப்பிரச்சினையை மாநிலங்களவையில் கிளப்ப எதிர்க்கட்சிகள் முற்பட்டனர். அதற்கு அனுமதி மறுக்கப்பட்டது. இதை எதிர்த்து கழகம், தி.மு.க. தவிர மற்ற உறுப்பினர்கள் சபையிலிருந்து வெளி நடப்பு செய்தனர்.

---

Published by K.Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D.M.K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road. Madras 600 029. Editor: E. PARASURAMAN.

---

# காலம் உருவாக்கிய அரசியல் தலைவர் புரட்சித்தலைவர்

## திருப்பூர் மணிமாறன் முழக்கம்

**சென்னை ஜூலை 10- காலம் உருவாக்கிய அரசியல் தலைவர் புரட்சித்தலைவர் என்று அரசு கொறடா திருப்பூர் மணிமாறன் கூறினார்.**

எம். ஜி. ஆர். இளைஞர் அணித் துவக்க விழாவை ஒட்டி கலைவாணர் அரங்கில் நடந்த பட்டிமன்றத்தில் கலந்து கொண்டு புரட்சித் தலைவரின் நிலைத்த புகழுக்குக் காரணம் அரசியல் பணியே என்ற தலைப்பில் திருப்பூர் மணிமாறன் எம். எல். ஏ. பேசுகையில் கூறியதாவது:

புரட்சித் தலைவரின் நிலைத்த புகழுக்குக் காரணம் அரசியல் பணிதான். கலைப்பணி அல்ல. இதற்கு ஆராய்ச்சி தேவையில்லை.

புரட்சி நடிகராக இருந்தவர் 1972ம் ஆண்டுக்குப் பிறகு புரட்சி நடிகர் என்ற பட்டத்தை தூக்கி எறிந்து புரட்சித்தலைவர் ஆன பிறகு தான் அவரை லட்சோபலட்சம் கண்கள் மொய்க்கத் தொடங்கின.

### வரலாற்று நாயகன்

தனி மனிதன் சம்பவங்களால் உருவாக்கப்படுகிறான்.

எங்கள் தலைவர் வரலாற்றுச் சம்பவங்களை உருவாக்கிய தலைவர்.

ஒரு மயான சூனியம் இந்த நாட்டை சூழ்ந்த காலம் இருந்தது. அந்தக் காலத்தை நினைத்துப் பாருங்கள்.

ஊழல்கள் விடுதலை கீதம் இசைந்து சுதந்திரமாக உலகைச் சுற்றி வலம் வந்த காலம் ஒன்று இருந்தது.

சட்டத்திற்கு சவுக்கடி கொடுத்து நியாயத்தை தூக்குமேடை ஏற்றிஅலங்கோலம் கோலோச்சிய காலத்தில் 1972ம் ஆண்டில் தமிழ்நாடு மகத்தான புரட்சியைக் கண்டதா இல்லையா?

ஊழலை அடியோடு ஒழித்து 1972-ம் ஆண்டு அக்டோபர் மாதம் 10-ம நாள் புரட்சி தீயைக் காட்டுத் தியாக பற்ற வைத்தாரே.

சினிமாவில் இருந்திருந்தால் அது வேறு நிலை.

### காலம் தந்த தலைவர்

இந்த நாடு புரட்சித் தலைவரை அரசியல் பெருந் தலைவராக அங்கீகரித்தது. யாரால் மறுக்க முடியும்?

சமுதாயம் சீர்கேட்டை நோக்கிப் போகும்போது பள்ளத்தாக்கில் விழும்போது. சீரழிவின் உச்சகட்டம் ஏற்படும் போதுதான் பேரறிஞர்கள் மேதாவிகள் ஞானிகள் தோன்றுவார்கள். அப்படி காலததால் அறிமுகப்படுத்தப் பட்ட தலைவர் புரட்சித் தலைவர்.

காந்த சக்தி படைத்த தலைவர்களாக லெனின், ரூஸ்வெல்ட், லிங்கன் கென்னடி, நேரு ஆகியோர் இருந்தனர்.

தமிழ் நாட்டில் தேடிப் பார்த்தால் அந்த காந்த சக்தி படைத்த தலைவர் புரட்சித் தலைவர்தான்.

லெனின் என்ன சினிமாவில் நடித்தாரா? ரூஸ்வெல்ட் சினிமாவில் நடித்தாரா?

புரட்சித் தலைவர் சினிமாவில் நடித்தார் அது வேறு விஷயம்.

சினிமாவிற்கு அப்பாற்பட்ட, தெய்வீகத்துக்கு அப்பாற்பட்ட ஒரு கவர்ச்சி புரட்சித் தலைவருக்கு இருக்கிறது.

ஒரு நாட்டை ஞானி தான் ஆள வேண்டும் என்றார் பிளாட்டோ. அவனுக்குத்தான் அடிப்படை உணர்வு தெரியும் என்றான்.

அரசியல் என்றால் சமுதாயப் பார்வை தொக்கி நிற்கிறதே அதை பாருங்கள். கலைத் துறையில் கொள்கைகளை சொன்னதால்தான் கை தட்டுதலைப் பெற்றார்.

### சாதனை

'அறிஞர் அண்ணா வாழ்கவே' என்று கொள்கையை எடுத்து வைத்தார். அங்கே அரசியல் பரிணாம வளர்ச்சிகண்டதால் வளர்ந்தார்.

அதனால் கோடானு கோடி மக்களால் மதிக்கப் பட்டார்.

சமுதாயத்தைப் பார்த்தவர் புரட்சித்தலைவர். அதனால் தான் புகழே தவிர வேறு காரணம் அல்ல.

பேரறிஞர் அண்ணா ஒரு நாள் பேசினார்.

''அண்ணாதுரை கட்டுப்பாடில்லாத கூட்டத்தை வைத்துள்ளார் என்று ஒரு அவப்பெயர் உள்ளது. நீங்கள் அனைவரும் ஒருநிமிடம் அமைதியாக எழுந்து நில்லுங்கள்'' என்று ஒரு பொதுக் கூட்டத்தில் சொன்னார்.

அந்தக் கூட்டம் அமைதியாக நின்றது.

இது தலைவர்கள் சாதித்த சாதனை.

1972-ம்ஆண்டிற்கு பின்னால் ஒரு நாள் புரட்சித் தலைவர் அறிக்கை விட்டார். ஆளுங் கட்சியை எதிர்த்து ஒரு நாள் கடை அடைப்பு செய்யவேண்டும். யாரும் வெளியே வராதீர்கள்'' என்றார்.

யாராவது வெளியே வந்தார்களா?

சினிமா ரீதியில் சொல்லியிருந்தால்மக்கள் கேட்டு இருப்பார்களா?

விஷக்கிருமிகளால் மக்கள் வாடக்கூடாது கஷ்டப்படக் கூடாது என்று விரும்பிய புரட்சிப் பூங்காவில் பூத்த தலைவன் அல்லவா?

அதனால்தான் பூரண கடை அடைப்பு அன்று நடந்தது.

மூன்றெழுத்தில் என் மூச்சு இருக்கும் என்றார். இரண்டு எழுத்து (கலை) என்று அவர் சொல்லவே இல்லை.

சமுதாயத்தை மாற்ற வேண்டும். பட்டினி சாவை ஒழிக்க வேண்டும் என்ற உணர்வு அவரது சிறுவயதிலேயே மேலோங்கி இருந்தது.

சமுதாயத்தை விரிந்த பார்வையில் பார்த்தார். இதற்கு கலை உலகை கருவியாகப் பயன்படுத்தினார். அரசியல் உலகத்தில், எதிர்காலத்தில் உலகம் போற்றும் தலைவராக விளங்க இருக்கிறார்.

அவரது புகழ் இன்று நிலைத்து இருப்பதற்கு காரணம் அரசியல் பணி தான்.

இவ்வாறு திருப்பூர் மணிமாறன் பேசினார்.

---

## சென்னையில் தங்க சுத்திகரிப்புநிலையம்

புதுடெல்லி, ஜூலை 10— சென்னை, நாகபுரி டெல்லி, ஐதராபாத், வாரணாசி, அமிர்தசரஸ், ஆமதாபாத், கொச்சி ஆகிய 8 இடங்களில் அரசு தங்க சுத்திகரிப்பு நிலையங்களை ஏற்படுத்தும்என்றுநாடாளுமன்றத்தில் ராஜாங்கமந்திரி அமைச்சர் சிசோடியா தெரிவித்தார்.

---

# அட்டைப் பட்டியல் முறையில் மின்கட்டண வசூல் திட்டம் வெற்றி

**சென்னை. ஜூலை 10 அட்டைப பட்டியல் முறையில் மின்கட்டணம் வசூல்செய்யும் திட்டம் நல்லபடியாக செயல்படுகிறது.**

மின்சார மீட்டர் கணக்கெடுப்பதில் பழைய முறைப்படி சிற்சில இடங்களில் குளறுபடிகள் ஏற்பட்டுள்ளன.

இந்தக் குளறுபடிகளை நீக்க கழக அரசு புதிய முறையைக் கொண்டு வந்தது. அதன்படி ஒவ்வொரு வீட்டிற்கும் மின்சார ஊழியர் வந்து, தனியாக தயாரிக்கப்பட்ட ஒரு அட்டையில் குறித்துக் கொள்வார். மற்றொரு அட்டை வீட்டுக்காரரிடம்இருக்கும் இந்த அட்டையில் குறிப்பிட்டபடி கட்டணம் செலுத்தினால் போதும்.

### தொல்லை இல்லை

அதிகமாக 'பில்'போட்டு விட்டார்கள் என்ற புகாருக்கு இதில் இடமில்லை.

இந்தத்திட்டம் சென்ற மாதம் முதல் செயல்படுத்தப்படுகின்றது.

இதனால் மின்சாரம் உபயோகிப் போருக்கும் பிரச்சினைகள் தொல்லைகள் இல்லை. சரியானபடி கணக்கீடு செய்யப்படுகிறது.

இத்திட்டம் நல்லமுறையில் செயல்படுகிறது.

2 மாதத்துக்கு ஒருமுறையாகக் கணக்கிடப்படுகிறது. சில பகுதிகளில் மாதம் ஒருமுறை கணக்கிடப்படுகிறது. இதனால் பிரச்சினைகள் தீர்ந்து விடுவதால் முன்னைவிட அதிக அளவில் வசூலும் ஆகிறது.

இத்திட்டத்தைச்செயல்படுத்த 1700 பேர் எடுக்க முடிவு செய்தனர். 70 சதவீதத்தினர் வேலைக்குச் சேர்ந்தனர் இன்னும் 500 ஆட்கள் இந்தப் பணிக்கு எடுக்கப்பட இருக்கின்றனர். பெருநகர் பகுதிகளில் தினசரி 140 வீடுகள் வரை சென்று கணக்கிட வேண்டும். இந்த ஊழியர்கள் மற்ற நகரப் பகுதிகளில் 100 வீடு முதல் 120 வீடுகளுக்கும், பஞ்சாயத்து தாலுகா பகுதிகளில் 80 முதல் 100 வீடுகளுக்கும் கிராமப்பகுதிகளில் 50 முதல் 70 வீடுகளுக்கும் சென்று கணக்கிட வேண்டும்.

---

## காந்தியின் சீடர் சரளாபென் காலமானார்

லக்னோ, ஜூலை 10— காந்தியின் நெருங்கிய சீடரும், சிறந்த சர்வோதய ஊழியருமான சரளாபென் நேற்று அல்மோராவில் காலமானார் அவருக்கு வயது 82.

காந்தியின் அகிம்சா தத்துவங்களால் ஈர்க்கப்பட்டு 1932 ஆம ஆண்டில் இந்தியா வந்த சரளாபென என்றழைக்கப்படும் காதரின் மேரி, பெண்களின் முன்னேற்றத்துக்கு அல்மோரா அருகே உள்ள காசானியில் ஆசிரமம் ஒன்றை அமைத்து நடத்தி வந்தார்.

காசானிக்கு அவரது உடல் எடுத்துச் செல்லும் முன் அல்மோராவிலுள்ள காந்தி ஆசிரமத்தில்சிறிது நேரம் வைக்கப்பட்டது.

ஏராளமான பொது மக்கள் அவருக்கு அஞ்சலி செலுத்தினார்கள்.

---

## கடும் வெயில் தொடரும்: இன்சாட் தகவல்

புதுடெல்லி, ஜூலை 10- வெயிலின் கொடுமை இன்னும் சில நாட்களுக்குத் தொடரும் என்று இன்சாட் செயற்கைக் கோளில் இருந்து தகவல் கிடைத்துள்ளது.

ஆகவே இன்னும் சில நாட்கள் மக்கள் வெயில் கொடுமையைத் தாங்கியாக வேண்டும்.

இம்மாதம் 12-ம் தேதிக்குப் பிறகே டெல்லியிலும், மற்ற வட மாநிலங்களிலும் பருவமழை துவங்கும் என்றும் தகவல் வந்துள்ளது.

வானிலை ஆராய்ச்சி டைரக்டர் ஆர். கே. தத்தா இந்தத் தகவலைத் தெரிவித்துள்ளார்.

பருவமழை காலதாமதத்திற்கான விளக்கத்தை அவர் அளித்தார்.

---

இலவச உணவுத் திட்டம்

# அமைச்சர் ராஜாமுகமது திடீர் சோதனை: உணவை ருசிபார்த்தார்

சென்னை. ஜூலை10— உத்திரமேரூர் அருகே உள்ள திருப்புலிவளம் என்ற கிராமத்தில் புதிதாக திறக்கப்பட்ட இலவச சத்துணவு திட்ட மையத்தில் அமைச்சர் ராஜாமுகமது திடீரென்று சோதனை நடத்தினார்.

உத்திரமேரூர் ஊராட்சி ஒன்றியத்தில் நடைபெறவிருந்த பல்வேறு நிகழ்ச்சிகளில் அமைச்சர் ராஜாமுகமது கலந்து கொள்ள அங்கு சென்றிருந்தார்.

அப்போது அவர் வழியில்திருப்புலிவளம் என்ற கிராமத்தில் புதிதாகத் திறக்கப்பட்டுள்ள இலவச சத்துணவு திட்ட மையத்திற்குச் சென்று திடீர் சோதனை நடத்தினார்.

அங்கு 100 குழந்தைகளுக்குச் சாம்பார் சாதம் தயார் செய்யப்பட்டிருந்தது. அமைச்சர் சாம்பார் சாதத்தை சாப்பிட்டு ருசிபார்த்தார். பின்னர் அந்த சாதத்தை அமைச்சரே குழந்தைகளுக்கு பரிமாறினார். அந்த மையம் சிறப்பாக செயல்பட்டு வருவதற்கு அமைச்சர் பாராட்டு தெரிவித்தார்.

அமைச்சருடன் சட்ட மன்ற உறுப்பினர் எஸ். ஜெகத்ரட்சகன், ஊராட்சி ஒன்றிய ஆலணயர் சந்தான கிருஷ்ணன் ஆகியோர் உடன் சென்றிருந்தனர்.

கைவலிக்க எழுதினாலும் சரி,
வாய் வலிக்க பேசினாலும் சரி

# புரட்சித்தலைவரின் புகழை கருணாநிதியால் குறைக்க முடியாது

## செல்வி ஜெயலலிதா முழக்கம்

சென்னை, ஜூலை 10- கைவலிக்க எழுதினாலும் சரி, வாய்வலிக்கப் பேசினாலும் சரி, புரட்சித்தலைவரின் புகழைக் குறைக்க கருணாநிதியால் முடியாது என்று செல்வி ஜெயலலிதா கூறினார்.

கலைவாணர் அரங்கில் நடந்த பட்டிமன்றத்தில் புரட்சித் தலைவரின் நிலைத்த புகழுக்குக் காரணம் கலைப்பணியே என்ற தலைப்பில் செல்வி ஜெயலலிதா பேசுகையில் கூறியதாவது:—

புரட்சித்தலைவரின் நிலைத்த புகழுக்கு காரணம் கலைஉலகப் பணி தான். கலைத்துறையில் பல புரட்சிகளை செய்து, யாரும்இதுவரை செய்யாத பல சாதனைகளை புரிந்து இருக்கிறார்.

அதன்மூலம் மக்களிடம் ஆதரவு பெற்று மக்கள் செல்வாக்கு பெற்றவராக புரட்சித் தலைவர் விளங்குகிறார்.

கலை உலகில் பெரும் செல்வாக்கு பெற்ற பிறகு தான் தி.மு.க வில் அவர் சேர்ந்தார்.

கட்சியில் சேர்ந்தபிறகு தான் கலைத்துறையையும் அரசியலையும் ஒன்றாக இணைத்து முன்னோடியாக விளங்கினார்.

கலைத் துறையிலும் அரசியலிலும் இருந்து புகழ் பெற்ற புரட்சித் தலைவர் உலகத்துக்கு, முன்னோடியாக விளங்கினார்.

1977-ம் ஆண்டு ஆட்சியைப் பிடித்து முதல்வரானார்.

இவர் முதல்வரான பிறகு தான் 1980-ல் அமெரிக்காவில் ரொனால்டு ரீகன் ஜனாதிபதி ஆனார்.

கலைத்துறையின் மூலம் சம்பாதித்ததால்தான் ஏழை எளிய மக்களுக்கு அவரால் வாரி வாரி கொடுக்க முடிந்தது.

### வாரிவழங்கும் வள்ளல்

அவர் தானம்செய்தார் கொடைவள்ளல், பொன்மனச் செம்மல், கொடுத்து கொடுத்து சிவந்த கரம் என்று இப்போதும் சால்கிறார்கள் இது எப்படி வந்தது, கலைத்துறையால் தான் வந்தது.

அரசியலில் ஈடுபட்டு இருந்தால் இப்படி கோடிக்கணக்கானவர்களுக்கு கொடுத்து இருக்க முடியுமா? லட்சக் கணக்கானோரின் கண்ணீரை துடைத்து இருக்க முடியுமா? கோடிக்கணக்கானோருக்கு பெரும் சேவை செய்திருக்க முடியுமா?

புரட்சித்தலைவர் கலை உலகில் தான் சுயமாக சம்பாதித்த பணத்தை வாரி, வாரி வழங்கினார். அதன் மூலம் உலகில் யாரும் பெறமுடியாத புகழைப் பெற்றார்.

எளிமையின் மறு உருவமாக உள்ள அவர் எந்தப் பயன் கருதியும் இப்படிச் செய்யவில்லை. தன்னால் முடிந்த அளவு செய்யும் கடமை என்று உணர்ந்து செய்தார்.

### உழைத்து சம்பாதித்தார்

மலையிலும், பாறையிலும் வெயிலைப் பொருட்படுத்தாமல் உடலை வருத்திக் கொண்டு உழைத்தார். வியர்வைக் கொட்டி கஷ்டப்பட்டு சம்பாதித்தார். ஏன் ஒருமுறை காலையும் முறித்துக் கொண்டு—இப்படி கடுமையாக உழைத்தார். அவருக்கு யாரும் சும்மா வாரி வழங்கவில்லை. அப்படி உண்மையாக சம்பாதித்த பணத்தை வறுமையில் வாடியவர்களுக்கு ஏழை எளியவர்களுக்கு புயல் வெள்ளத்தால் வாடியவர்களுக்கு தாராளமாக வழங்கினார்.

### கருணாநிதிக்கு நினைவு இல்லையா?

1965-ம் ஆண்டு இந்தி எதிர்ப்புப் போராட்டம் வந்தது.

"புரட்சித் தலைவர் கோவாவில் இருந்தாராம் அக்கறை காட்டவில்லையாம்" — இப்படி கருணாநிதி அடிக்கடி கூறி வருகிறார்.

இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் தீக்குளித்து இறந்து போன சின்னசாமிக்கு புரட்சித் தலைவர் ரூ.5 ஆயிரம் நிதி கொடுத்தார். யாரிடம் கொடுக்கிறார்? இதே கருணாநிதியிடம் தான். கருணாநிதியிடம் ஒரு கடிதத்தையும் கூட கொடுத்து அனுப்புகிறார்.

திருச்சியில் நடந்த கூட்டத்தில் கருணாநிதி அந்த நிதியைக் கொடுத்தார்.

"சின்னசாமியின் தியாகத்துக்கு தன்னால் முடிந்த அளவு அனுப்பியிருக்கிறேன்' என்று அந்தக் கடிதத்தில் புரட்சித்தலைவர் கூறியிருக்கிறார்.

### புரட்சித்தலைவர் புகழ் அழியாது

அந்தக் கடிதத்தை அன்று படித்தவர் இதே கருணாநிதிதான்.

அவர் தான் இன்று புரட்சித்தலைவர் பற்றி இல்லாதது, பொல்லாதது எல்லாம் பேசி வருகிறார். தொண்டை வலிக்க பேசியும், கைவலிக்க எழுதியும் வருகிறார். கருணாநிதி புகாருக்கு மக்கள் செவி சாய்க்கவில்லை. அவர் என்னதான் பேசினாலும் புரட்சித் தலைவர் புகழினை அழிக்க முடியாது.

யாரும் பெற முடியாத அழியாப்புகழை புரட்சித் தலைவர் பெற கலை தான் காரணம்.

பயனுள்ள பல கருத்துக்களை அவர் கலையின் மூலமே சொன்னார்.

கூட்டம் மூலமோ பத்திரிகை மூலமோ கருத்துக்களை சொன்னால் அது பல லட்சம் பேருக்குத் தான் தெரிகிறது. ஆனால் அதையே சினிமாவின் மூலம் சொல்லும் போது கோடிக்கணக்கானவர்களுக்குத் தெரிகிறது.

### அண்ணா சொன்னது

சினிமாவை விட சக்தி வாய்ந்த துறை கிடையாது என்று அண்ணா சொன்னார்.

நான் கதை வசனம் எழுதிஎடுக்கும் 3படத்தை தணிக்கை செய்யாமல் அனுமதிப்பார்களானால் நான் விரைவில் திராவிட நாடு பெறுவேன் என்றார் அண்ணா.

வேறு யாருக்கும் கூடாத கூட்டம் புரட்சித் தலைவருக்கு கூடுகிறது என்றால் அதற்குக் காரணம் அவரது கலைஉலகப் பணிதான்.

நாட்டு மக்களிடம் சுதந்திரத்துக்கு தியாகம் செய்த பெரியோர் யார் என்று கேட்டால் லட்சத்தில் ஒருவர் சொல்வது சந்தேகமே;

ஆனால் 5 வயது குழந்தை கூட புரட்சித் தலைவரை நன்றாக தெரிந்து வைத்திருக்கிறது.

புரட்சித் தலைவர் பெயரில் துவக்கப்படும் அமைப்பு இன்றோடு நாளையோடு முடியும் அமைப்பு அல்ல; தொடர்ந்து இருக்கும்.

வாழ்க்கைக்குத் தேவையான அத்தனைக் கருத்துக்களும் அவர் பாடிய பாடல்களில் இருக்கின்றன. அந்தக் கருத்துக்கள் எக்காலத்துக்கும் பொருந்தக்கூடியவை.

### மினிமம் கியாரண்டி

எம். ஜி. ஆர். என்றால்—மினிமம் கியாரண்டி ராமச்சந்திரன் என்றும் பொருள்.

தமிழகத்தில் இன்று 2 ஆயிரம் திரையரங்குகள் உள்ளன. இதில் ஆயிரத்துக்கும் மேற்பட்ட திரையரங்குகளில் புரட்சித்தலைவர் நடித்த படங்கள்தான் ஓடுகின்றன.

கலை உலகப் பணியில் நிலைத்துவிட்ட புகழ் என்று கூறலாம்.

நிலைக்கப்போகும் புகழ் அரசியலில் என்று குறிப்பிடலாம்.

### கலை உலக முதல்வர்

அரசியல் துறையில் அண்ணாவுக்கு பிறகு 2-வது தான் புரட்சித் தலைவர். கலைத் துறையில் என்றுமே புரட்சித் தலைவர்தான் முதல்வர்.

இவ்வாறு செல்வி ஜெயலலிதா பேசினார்.

பெரியார், அண்ணாவுக்குப் பின்

# திராவிட மக்களின் ஒப்பற்ற தலைவர் புரட்சித் தலைவரே

## திருவாரூர் தங்கராசு பேச்சு

சென்னை, ஜூலை. 10— பெரியார், அண்ணா ஆகியோருக்குப் பின் திராவிட மக்களின் ஈடிணையற்ற தலைவராகத் திகழ்பவர் புரட்சித்தலைவர் தான் என்று திருவாரூர் தங்கராசு கூறினார்.

கலைவாணர் அரங்கில் புரட்சித் தலைவர் தலைமையில் நடந்த தனது மகள் திருமண விழாவில் அனைவரையும் வரவேற்றுப் பேசுகையில் திருவாரூர் தங்கராசு கூறியதாவது-

சமுதாய சீர்திருத்தக் கருத்துக்களை பேரறிஞர் அண்ணாவும் தந்தை பெரியாரும் தீவிரமாக செயல்படுத்தி வந்தனர்.

### திராவிட மக்கள் தளநாயகர் புரட்சித் தலைவர்

அந்த மாபெரும் தலைவர்கள் காண விரும்பிய சாதியற்ற ஒரு புதிய சமுதாயம் அமைக்க வேண்டும் என்ற அரிய நோக்கத்திற்காக இரவு பகல் பாராது கடமையாற்றி அரும் பணியாற்றுகிறார். முதல்வர் புரட்சித் தலைவர். அந்தவகையில் அவர் திராவிட மக்களின் தளநாயகர். எங்கள் அன்புக்குரிய குடும்பத்தலைவர் புரட்சித்தலைவர் எனது இளைய மகள் திருமணத்தை நடத்தி வைக்கிறார்.

தாலிஇல்லாதுசாதியை ஒழிக்கவேண்டும் என்று இத்தகைய திருமணங்கள் நடக்கின்றன.

என் குழந்தைகளுக்கு தந்தை பெரியார் பெயர் வைத்தார். அவர்கள் பட்டம் வாங்கியபோது மகிழ்ந்தார். அவர்கள் இல்வாழ்க்கை ஏற்ற போது தந்தை பெரியார் இல்லை.

அவரது இடத்தை முதல்வர் புரட்சித் தலைவர் நிறைவு செய்து வருகிறார்.

இதை நாடு அறியும், நல்லவர்கள் அறிவார்கள்.

4 ஆண்டுகளுக்கு முன்பு எனது மூத்த செல்வியின் திருமணத்திற்கு தலைமை தாங்கிநடத்தி வைத்தார். முதல்வர் புரட்சிதலைவர் வேறு யாராலும் தீர்த்து வைக்கமுடியாத சிக்கலை தீர்த்து அந்த திருமணத்தை அன்று முதல்வர் புரட்சித் தலைவர் நடத்தினார்.

எனது மூத்த மகளுக்கு பிறந்த மகனுக்கு தமிழ்ச் செல்வன் என்று அவரே பெயர் சூட்டினார்.

இவ்வாறு திருவாரூர் தங்கராசு பேசினார்.

முன்னாள் தலைமை நீதிபதி ராமபிரசாத்ராவ் பேசுகையில் "தமிழக முதல்வர் சிறந்த நிர்வாகி பரந்த மனப்பான்மை உடையவர். அவரது தலைமையில் இந்த திருமணம் நடப்பது சாலப்பொருத்தமானது" என்றார்.

## கழக எம்.எல்.ஏ ஆரணி சண்முகம் திருமணம்

சென்னை, ஜூலை 10— ஆரணி தொகுதி கழக சட்டமன்ற உறுப்பினர் ஏ. சி. சண்முகம் திருமணம் இம்மாதம் 11-ந் தேதி காலை 9 மணிக்கு முதல்வர் புரட்சித்தலைவர் தலைமையில் ஆரணியில் நடக்கிறது. மணமகள் சென்னை செனாய்நகர் செங்கல் அதிபர் சி. ஆறுமுகத்தின் புதல்வி லலிதாலட்சுமி,

இத்திருமணம் ஆரணி கோட்டை வெளிதிடலில் நடைபெறுகிறது. கழகப் பொதுச்செயலாளர் ப. உ. ச. அனைவரையும் வரவேற்கிறார். திருமணத்தில் சபாநாயகர் ராசாராம், துணைச் சபாநாயகர் பி. எச். பாண்டியன், அமைச்சர்கள், சட்டமன்ற, மேலவை உறுப்பினர்கள் மணமக்களை வாழ்த்திப் பேசுகின்றனர்.